Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு

**தமிழ்**

தமிழ்மொழி இருந்த இடத்திலிருந்து காண்டே உலகின் பல இடங்களையும் வென்றுகொண்டு வருகிறது.

-பேரறிஞர் அண்ணா


# அண்ணா

**நிறுவனர்: எம்.ஜி.ஆர்**

**உரிமை**

என் அபிப்பிராயத்தை மறுக்க உங்களுக்கு உரிமையுண்டு. ஆனால் என் அபிப்பிராயத்தை வெளியிட எனக்கு உரிமையுண்டு.

-தந்தை பெரியார்




மலர்: 7 சென்னை 14 - 12 - 82 செவ்வாய் வெளியூர் 15 - 12 - 82 புதன் இதழ்: 58

பீகார் மாநிலம்

## பரோடா கலவரத்தில் கத்திக்குத்து - போலீஸ் துப்பாக்கிச்சூடு

**பரோடா, டிச. 14— பீகார் மாநிலம் பரோடா நகரில் ஏற்பட்ட கலவரத்தைத் தொடர்ந்து 12 கத்திக்குத்துச் சம்பவங்கள் நடந்தன. இதையடுத்து போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தினார்கள்**

பீகார்மாநிலம்பரோடா நகரில் அடிக்கடி கலவரம் ஏற்பட்டுவருவது தெரிந்ததே.

பரோடா நகரின் தலைமைப் போலீஸ் அதிகாரி ஜஸ்பால்சிங் என்பவரை வேறு இடத்திற்கு மாற்ற அரசு உத்தரவிட்டது.

இதையடுத்து நேற்று தகராறு ஏற்பட்டு, பிறகு கோஷ்டிக் கலவரமாக மாறிவிட்டது.

நகரின் பல இடங்களில் கலவரம் ஏற்பட்டு வன்முறைச் சம்பவங்கள் நடந்தன.

நேற்றிரவில் இருந்து இன்று காலை 11 மணி வரை 12 கத்திக் குத்துச் சம்பவங்கள் நடந்தன.

இதையடுத்து போலீசார் பலமுறை துப்பாக்கிச்சூடு நடத்தினார்கள்.

இன்று காலை வன்முறைக்கும்பல் கடைகளுக்கு தீ வைத்தது.

முக்கிய சாலைகளில் ஆட்டோ ரிக்ஷாக்கள், ஸ்கூட்டர்கள், மற்றும் சைக்கிள்களுக்கும் தீ வைக்கப்பட்டது.

### திராவகம் வீச்சு

ஒரு வீட்டின் மாடி மீதிருந்து தெருவில் சென்ற கூட்டத்தினர் மீது திராவகம் வீசப்பட்டது.

இதைத் தொடர்ந்து போலீசார் அந்தவீட்டை சோதனை செய்து 20 லிட்டர் திராவகத்தைப் பறிமுதல் செய்தனர். அந்த வீட்டின் சொந்தக்காரர் கைது செய்யப்பட்டார்.

போலீசார் நடத்திய துப்பாக்கிச் சூட்டிலும், திராவக வீச்சிலும் காயமடைந்தவர் எண்ணிக்கை குறித்தும் மற்றும் யாரேனும் உயிரிழந்தார்களா என்பது குறித்தும் உடனடியாக தகவல்கள் கிடைக்கவில்லை.

பீகாரில் இருந்து பம்பாய்நகருக்கு அனுப்பப்பட்டிருந்த 6 பட்டாலியன் விசேஷ போலீசார் உடனடியாகத்திரும்ப அழைக்கப்பட்டுள்ளனர்.

மாநில போலீஸ் டைரக்டர் ஜெனரல், பி. என். ரைட்டர் பரோடாவுக்கு விரைந்துள்ளார்.

## கிரிக்கெட்: ஸ்கோர் விவரம்

லாகூர், டிச. 15| இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்கும் இடையே லாகூரில் நடக்கும் முதலாவது கிரிக்கெட் டெஸ்டின் 4-வது நாளான இன்று காலை தொடர்ந்த போது இந்திய அணியின் அருண்லால் 51 ரன்களோடும், விஸ்வநாத் 2 ரன்களோடும், வெங்சர்க்கார் 3 ரன்களோடும் அவுட் ஆயினர்.

கவாஸ்கர்மட்டும் நிலை பெற்று ஆடிவருகிறார்.

ஸ்கோர் விவரம்:—

| | |
|---|---|
| அருண்லால் | —51 ரன்கள் |
| வெங்சர்க்கார் | —3 |
| விஸ்வநாத் | —2 |
| கவாஸ்கர் | —70 |
| மோகிந்தர் அமர்நாத் | —17 |

மொத்தம் 3 விக்கெட் இழப்பிற்கு 166 ரன்கள்.

**யுனெஸ்கோ கருத்தரங்கில் முதல்வருக்கு பாராட்டு**

3-ம் பக்கம்

# பண்பாடு கலந்த புதிய கல்வி திட்டம் தருக

## உலகக் கல்வி நிபுணர்களுக்கு புரட்சித்தலைவர் வேண்டுகோள்

**சென்னை, டிச. 14- பண்பாடு கலந்த புதியதொரு கல்வித் திட்டத்தை உலகம் முழுவதும் உள்ள முதியவர்களுக்குத் தாருங்கள் என்று உலகக் கல்வி நிபுணர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் வேண்டுகோள் விடுத்தார்.**

சென்னை கோட்டையில் பல்வேறு நாட்டுப் பிரதிநிதிகள் பங்கேற்ற வயது வந்தோர் கல்வி பற்றிய கருத்தரங்கைத் துவக்கிவைத்து முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது:-

தனக்கென்று ஒரு தனி வரலாறு கொண்டது சென்னை நகரம்.

அதற்கு மேலும் ஒரு தனிச் சிறப்பு இன்று நடைபெறும் வயது வந்தோர் கல்வி ஆய்வரங்கம் மூலம் ஏற்பட்டு இருக்கிறது.

இதில் பங்குகொள்வதற்காக உலகமெங்குமுள்ள கல்வி வல்லுனர்கள் வந்துள்ளதை எண்ணிமகிழ்வு கொள்கிறேன்.

இதற்காக நான் தனித்த முறையிலும் எங்கள் அமைச்சரவை சார்பிலும் யுனெஸ்கோ நிறுவனத்திற்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்று நடைபெறும் இந்த மாநாடு தமிழகத்திற்கு தனிச்சிறப்பாக அமைகிறது என்றாலும் அந்தந்தநாடுகளின் பிரதிநிதிகள் இங்கே வந்திருப்பது பல பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு உதவியாக இருக்கும் என்று கருதுகிறேன்.

வயது வந்தோருக்கு கல்வி அறிவு தருகின்ற பணியில் மற்றவர்கட்கு வழிகாட்டியாக நீங்கள் இங்கே எடுக்கின்ற முடிவுகள் மற்றவர்களை வாழ வைக்கப் போகிறது.

இந்தியத் துணைக் கண்டம் முழுவதும் படித்தவர்கள் எண்ணிக்கை 31 சதவிகிதம் என்றும், தமிழகத்தில் 46 சதவிகிதமாகவும் இருந்தது.

### கழக ஆட்சியின் சாதனை

ஆனால் நாங்கள் பொறுப்பேற்ற சமயத்தில் அந்த எண்ணிக்கை குறைவாக இருந்தது. பொறுப்பேற்ற பிறகு வயது வந்தோருக்குக் கல்வி அளித்து உங்களைப் போன்றவர்களிடம்இருந்து பாராட்டு பெற்று "குருப்ஸ்கயா" (Krupskuya) என்ற யுனெஸ்கோ பரிசைப் பெறும்நிலையில் நாங்கள் இருக்கிறோம்.

பால்மைக்கி பேசுகையில் ஜனநாயகம் பற்றி சேர்த்துப் பேசினார்.

ஜனநாயகம் என்பதை நான் விளக்க வேண்டிய நிர்ப்பந்தம் இல்லையென்றாலும் சுதந்திரம் அடைந்தவுடன் பண்டித நேரு அவர்கள் வயது வந்தோர் அனைவருக்கும்கல்வி என்பதைப் பற்றிச் சொன்னார்.

அவர் எந்த நிலையில் அதைச் சொன்னார் என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

### கல்வியும் அனுபவமும்

கல்வி எந்த அளவு ஒருவருக்குத் தேவையோ அந்த அளவு அனுபவமும் தேவை.

கல்வி — மற்றும் அறிவாற்றல் நுணுக்கங்களை தெரிந்துகொண்டால்மட்டுமஒருவன் அனுபவத்தை தெரிந்து கொண்டதாக ஒப்புக் கொள்ள முடியாது.

மகாத்மாகாந்தி ஆதாரக்கல்வி தேவை என்றார்.

தமிழக அரசைப் பொறுத்தவரை நாங்கள் எங்கள் தலைவர் பேரறிஞர் அண்ணா அவர்கள் சொல்லியதைச் செயலாற்றுகிற நேரத்தில் அவர்களின் எண்ணப்படி செயல்படுத்துகிறோம்.

அனுபவத்தை சரிவர சொல்லித்தர வேண்டுமா என்று எண்ணும்போது கல்வி வேண்டும் என்ற கொள்கையில் அனுபவமும் சேர்த்து தர வேண்டும்.

அந்த வகையில் நாங்கள் 11 ஆயிரம் பள்ளிகளுக்கு முதியவர்களை அனுப்புகிறோம் என்பதில் பெருமை அடைகிறோம்.

ஏறத்தாழ 3 லட்சத்து 60 ஆயிரம் பேர் முதியோர் கல்வி கற்கிறார்கள்.

இந்த 3 லட்சத்து 60 ஆயிரம் பேர் கற்றுக்கொள்ளும் முறை எங்களுக்குத் திருப்தியைத் தந்து இருந்தாலும் நாங்கள் அந்தக் கல்வி முறையில் மாற்றம் வேண்டும் என்று கருதுகிறோம்.

எழுத்து எண்ணிக்கை மட்டும் கற்றுக் கொடுத்துவிட்டு வேறு அனுபவங்களைச் சொல்லிக் கொடுக்காமல் இருப்பது காலம்தாழ்த்துவது என்பதாகும்.

### புதிய கல்விமுறை

அந்த வகையில் புதிய கல்விமுறையைப் பயன்படுத்தவேண்டும் எனக் கருதுகிறோம்.

அதற்கான திட்டங்களை நீங்கள் வகுத்துத் தரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்தியத் துணைக் கண்டத்தில் பல ஜாதி, மதங்கள் இருந்தாலும் நாங்கள் எண்ணத்தால் ஒன்று என பாரதி சொன்னதை நினைவுபடுத்த விரும்புகிறேன்.

குறிப்பாக தமிழகத்தை பொறுத்தவரை எந்த அளவு ஒற்றுமையாக வாழ முடியுமோ அதை செயல்படுத்தி வாழ்ந்து கொண்டு இருக்கிறோம்.

இதற்கு அடிப்படை இயற்கையாக உள்ள பண்பாடுதான் காரணம்.

கல்வி மட்டும் ஒருவருக்குப் பண்பாட்டை உருவாக்கி விடாது.

### பண்பாட்டோடு இணைந்த கல்வி

பண்பாட்டோடு கல்வி ஒட்டி இருக்கவேண்டும். அப்படி இருக்கும்போதுதான் உங்களைப் போன்றவர்களை எங்களால் வரவேற்க முடிகிறது.

உங்கள் ஒவ்வொருவருக்கும் எங்களைப் போன்ற பண்பாடு, தனித்தனியாக இருந்தாலும் அந்தப்பண்பாட்டின் அடிப்படையில் தோன்றும் நோக்கம் மக்களுக்கு நல்வாழ்வு தர வேண்டும் என்று கருதுகிறேன்.

அதுதான் நம்மை ஒன்றுபடுத்தும்

அதன் அடிப்படையாக குழந்தைகளுக்கு மட்டும் அல்லாமல் வயது வந்தோருக்கும் கல்வி தந்து வாழச் செய்வது இன்றுபலருக்குத்தெரியாமல் இருந்தாலும் எதிர்காலத்தில் புரிந்து கொள்வார்கள்.

இதைக் கூறும் அனுப

(3-ம் பக்கம் பார்க்க)

தேசிய புத்தக வாரம்:

## பிரதமர் இந்திரா வாழ்த்து

புதுடெல்லி, டிச. 14— தேசிய புத்தக வாரம் இன்று (14-ந்தேதி) முதல் நாடெங்கிலும் கொண்டாடப்படுகிறது. இதனை முன்னிட்டு பிரதமர் இந்திரா காந்தி வெளியிட்டுள்ள செய்தி வருமாறு:-

"இதர நாடுகளைவிட நீண்ட காலமாக சரித்திரத்தையும், எழுதப்பட்ட புத்தகங்களையும் பெற்றுள்ள நமது நாட்டில் புத்தகம் வாங்கும் பழக்கம், படிக்கும் பழக்கம் மிகக் குறைவாக இருப்பது கவலைக்குரியது. நமது பொருளாதார வளர்ச்சிக்கு இணையாக படிக்கும் பழக்கம் வளரவில்லை. நமது அறிவை விசாலப்படுத்திக் கொள்ள படிக்கும் பழக்கத்தை ஊக்குவிக்க அனைத்து முயற்சிகளையும் எடுக்க வேண்டும்.

தாய்மொழியிலேயே மக்கள் அறிவைப் பெற இயலும். புத்தக ஆசிரியர்கள், வெளியீட்டாளர்கள், நாட்டின் இளைஞர் முதியோரிடையே புத்தகம் படிப்பதில் உள்ள மதிப்பினை பரப்ப பாடுபடவேண்டும்.

தேசிய புத்தக வாரத்திற்கு எனது நல்வாழ்த்துக்கள்.

இவ்வாறு பிரதமர் இந்திராகாந்தி தெரிவித்துள்ளார்.

கழக அரசின் திட்டத்தால்

## கல்விகற்பதில் முதியோர் அதிகஆர்வம்: அமைச்சர் அரங்கநாயகம் தகவல்

**சென்னை, டிச. 14. கழக அரசின் திட்டத்தால் தமிழகத்தில் முதியோர் ஏராளமானவர்கள் கல்வி கற்றுப் பயன் பெற்றிருக்கிறார்கள் என்று அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.**

வயது வந்தோர் கல்வி ஆய்வு அரங்கம் — யுனெஸ்கோ சார்பில் தமிழக அரசுதலைமைச்செயலகத்தில் இன்று தொடங்கியது.

இதில் இந்தியா, வங்கதேசம், பிரேசில், சீனா, எத்தோப்பியா, இந்தோனேஷியா, இராக், கொரியா, மாலவி, நேபாளம் உக்குருவா, பாகிஸ்தான், டான்சியா, வியட்நாம், ஏமன் ஆகிய நாட்டுபிரதிநிதிகள் பங்கேற்றனர்.

முதல்வர் புரட்சித்தலைவர் ஆய்வு அரங்கத்தை தொடங்கி வைத்தார்.

கல்வி அமைச்சர் அரங்கநாயகம் தலைமை உரை நிகழ்த்தினார்.

அவர் பேசுகையில் கூறியதாவது:—

பிரதமர் இந்திரா அறிவித்த 20-அம்சத் திட்டத்தில் ஆரம்பக்கல்விக்கும் வயது வந்தோர் கல்விக்கும் முக்கியத்துவம் கொடுக்கவேண்டும் என குறிப்பிடப்பட்டுள்ளது. 4 83 கோடி மக்கள் தொகையுள்ள தமிழகத்தில் தற்போது கல்வி அறிவு பெற்றவர்கள் சதவிகிதம் 45.7 ஆகும்.

[illegible] 11 வயதுஉள்ள [illegible] தற்போது [illegible] 6 சதவிகிதம் பேர் [illegible] றார்கள். [illegible] 5 வயது வரை [illegible] குழந்தைகளுக் [illegible] குழந்தைகள் நல மையங்களை தமிழக அரசு துவக்கி உள்ளது.

முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவு திட்டத்தால் 63 லட்சம் குழந்தைகள் உணவு பெறுவதோடு கல்வியும் பெறுகின்றனர்.

இத்திட்டத்தின் அடுத்த கட்டமாக குழந்தைகளுக்கு இலவசமாக பல்பொடியும் வழங்கப்படுகிறது. குழந்தைகள் உடல் நலமும் பரிசோதனை செய்யப்பட்டு அவர்கள் நலம் பேணப்படுகிறது.

1978-81-ல் முதியோர் கல்வி திட்டத்தின் கீழ் 10 லட்சத்துக்கு மேற்பட்டவர்கள் பயனடைந்தார்கள். அவர்களில் 60 சதவிகிதம் பேர் பெண்கள்.

### கழக அரசுக்கு நன்றி

இந்தப்பணிகாரணமாக 1982ல் யுனெஸ்கோவின் குருப்ஸ்கயா என்ற விருது கிடைத்துள்ளது.

இவ்வாறு விருது அளித்து ஊக்கப்படுத்தியதற்காக நன்றி தெரிவித்துக் கொள்கிறோம.

தற்போது வயது வந்த (18 முதல் 35 வயதானவர்கள்) 65 லட்சம் பேர் கல்வி அறிவு எழுதப்படிக்கத் தெரியாமல் உள்ளனர். 1990க்குள் அவர்களுக்கும் கல்வி வழங்க திட்டமிட்டு செயல்பட்டு வருகிறோம். தற்போதுநிதி ஒரு பிரச்சினையாக உள்ளது.

கல்வி அறிவின்மையைப் போக்கி கல்வி வழங்க யுனெஸ்கோவின் உதவியை எதிர்நோக்குகிறோம்.

கல்வி அறிவு இல்லாதவர்களில் பெரும்பான்மையானவர்கள் பெண்கள். எங்களது திட்டம் அவர்களுக்கும் கல்வி வழங்க வேண்டும் என்பதாகும்.

வயதுவந்தோர் கல்வி மேம்பாட்டிற்காக 1976ல் தமிழ்நாட்டில் தனி இயக்கம் தொடங்கப்பட்டது. 16 மாவட்டங்களில் இது நல்ல முறையில் செயல்பட்டுவருகிறது.

1980-ல் 14 ஆயிரத்து101 முதியோர் கல்வி நிலையங்கள் அமையப்பெற்று அவற்றில் 3 லட்சத்து ஆயிரத்து 658 பேர் படித்தனர்.

### கல்விக்கு ரூ. 290 கோடி

தாழ்த்தப்பட்ட பெண்கள் அதிக அக்கறை காட்டுகிறார்கள்.

செங்கை மாவட்டத்தில் 500 மையங்களில் தாழ்த்தப்பட்ட மக்கள் அதிக அளவில் வந்து படித்து பயன் பெறுகிறார்கள்,

கல்விக்காக இந்த அரசு பெரும் அளவில் செலவிடுகிறது.

கல்விக்காக 55-56-ல் 10.93 கோடி செலவிட்டார்கள். தற்போது ரூ. 290 கோடி நாங்கள் ஒதுக்கீடுசெய்து கல்விக்கு செலவழிக்கிறோம்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

ஜப்பானிலிருந்து

## நேதாஜி சாம்பலை எடுத்துவர மைய அரசிற்கு கோரிக்கை

சென்னை, டிச. 14— நேதாஜி சுபாஷ் சந்திர போசின் சாம்பலை ஜப்பானிலிருந்து இந்தியாவுக்கு சகல மரியாதைகளுடன் கொண்டு வந்து காந்திஜிக்கும், நேருவுக்கும் அமைக்கப்பட்ட நினைவுச் சின்னம் போல் ஒன்றை புது டெல்லியில் அமைக்க மத்திய அரசை வற்புறுத்துவோம் என்று நேதாஜி நினைவு நிலையத்தின் பொதுச் செயலாளர் கே. துரைசாமி தெரிவித்துள்ளார். மேலும் அவரது 86-வது பிறந்த தின விழா ஜனவரி 23 முதல் 27 வரை சென்னையில் சிறப்பாக நடத்தப்படும் என்றும் அவர் தெரிவித்தார்.

கோளாவில்:

பிரதமர் முன்னிலையில்

## இ. காங்கிரசும், அந்தோணி காங்கிரசும் இணைந்தது

கொச்சி, டிச. 14— கோளாவில் இ. காங்கிரஸ், அந்தோணி காங்கிரஸ் இணைப்பு விழா பிரதமர் இந்திரா காந்தி முன்னிலையில் நடைபெற்றது. பிரதமர் முன்பு 2 காங்கிரசும் ஒன்றாக இணைந்தன.

இந்த விழாவில் கலந்து கொள்வதற்காக பிரதமர் இந்திரா காந்தி ஒரு தனி விமானம் மூலம் கொச்சிக்கு வந்தார். விமான நிலையத்தில் அவரை கவர்னர் பா. ராமச்சந்திரன் முதலமைச்சர் கருணாகரன், அந்தோணி காங்கிரஸ் கட்சித்தலைவர் ஏ. கே. அந்தோணி ஆகியோர் வரவேற்றனர் அங்கிருந்து பிரதமர் விருந்தினர் மாளிகைக்கு சென்றார். அங்கு பிரதமருடன் முதல்மந்திரி கருணாகரன், அந்தோணி பேச்சு வார்த்தை நடத்தினர்.

இந்த பேச்சுவார்த்தை 80 நிமிடம் நடைபெற்றது. அதன் பிறகு கருணாகரனும், அந்தோணியும் நிருபர்களிடம் கூறுகையில் எல்லாம் மகிழ்ச்சிகரமாக முடிந்து விட்டது இனிமேல் எந்தப் பிரச்சினையும் வராது. இப்போது நாங்கள் அனைவரும் ஒரே காங்கிரஸ்தான் என்று தெரிவித்தனர். அதைத் தொடர்ந்து நடந்த இணைப்பு விழாவில் பிரதமர் இந்திராகாந்தி முன்னிலையில் இரண்டு காங்கிரசும் ஒன்று சேர்ந்தன.

# அதிகாரிகளை அவதூறாக எழுதும் ஆசிரியர்கள் மீது கடும் நடவடிக்கை

### அமைச்சர் அரங்கநாயகம் எச்சரிக்கை

சென்னை, டிச. 14. ஆசிரியர்கள் தங்களது கோரிக்கைகளை வலியுறுத்தி, குறைகளைப் போக்க முறையான வழியைக் கடைப்பிடிக்க வேண்டும். அப்படி அல்லாமல் சுவர்களிலும், துண்டுப் பிரசுரங்களிலும் அதிகாரிகளை ஆபாசமாகவும், தரக்குறைவாகவும் எழுதுகின்ற ஆசிரியர்கள் மீது அரசு நடவடிக்கை எடுக்கும் என்று கல்வி அமைச்சர் அரங்கநாயகம் தெரிவித்துள்ளார்.

இது குறித்து அவர் நிருபர்களிடம் கூறியதாவது:—

தற்போது காலியாக உள்ள கல்லூரி கல்வி இயக்குனர் பதவிக்கு விரைவில் ஒருவரை தமிழக அரசு நியமிக்கும்.

காரைக்குடியில் பல்கலைக்கழகம் அமைப்பது குறித்தும் அரசு ஆலோசித்து வருகிறது.

பல்கலைக் கழகங்களில் சிண்டிகேட், செனட், அகடமி கவுன்சில்கள் இவற்றில் ஏதாவது இரண்டு இருந்தால் போதும் என்று அரசு கருதுகிறது. பல்கலைக் கழக நிர்வாக குழுக்களில் பட்டதாரி தொகுதிகளை நீக்க அரசு முடிவு செய்துள்ளது.

மேலும் பிளஸ் 2 மாணவர்கள் அடுத்த ஆண்டு முதல் நேரிடையாக சட்டப் படிப்புக்கு சேரலாம். இது தவிர நர்சரி பள்ளிகளை அடுத்த கல்வி ஆண்டிலிருந்த தமிழக அரசே தொடங்க இருக்கிறது.

### புதிய ஆசிரியர் நியமனம்

அடுத்த மாதம் நியமிக்கப்பட இருக்கும் சத்துணவுத் திட்டமையப் பொறுப்பாளர்கள் கல்வித் துறையின் கீழ் வருவார்களா? அல்லது ரெவின்யூ இலாகாவின் கீழ் வருவார்களா என்பது குறித்து அரசு பரிசீலனை செய்து வருகிறது.

சத்துணவுத் திட்டம் நிறைவேற்றப்பட்ட நகுபி வகுப்புகளில் அதிக மாணவர்கள் சேர்க்கப்பட்டு இருந்தால் புதிய ஆசிரியர்கள் நியமிக்கப் படுவார்கள்.

தனியார் பள்ளி ஆசிரியர்களுக்கு செங்கை மாவட்டத்தில் அரசு நேரிடையாக சம்பளம் வழங்குகிறது. இதை மற்ற மாவட்டங்களுக்கும் விஸ்தரிக்க அரசு முடிவு செய்துள்ளது.

### கல்வித்தரம் உயரும்

8-ஆம் வகுப்பு வரை தேர்வுகளில் குறைந்த மார்க் எடுத்தால் அவர்களை அந்த வகுப்பிலேயே நிறுத்த அவசியமில்லை என்று மத்திய அரசு தெரிவித்துள்ளது. ஆனால் தமிழகத்தில் 8-ஆம் வகுப்பு ஒரு பொதுத் தேர்வு. எனவே மத்திய அரசின் முடிவை அரசு ஏற்கவில்லை. அவர்களை தொடர்ந்து மீண்டும் 8-ஆம் வகுப்பு படிக்க வைப்பதால் அவர்களுடைய கல்வித் தரம் உயரும்.

கல்லூரிகளில் செமிஸ்டர் முறையினால் பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட மாணவர்கள் எழுதி பயனடைகின்றனர். அதனால் அரசு இதை ஆதரிக்கிறது. இதில் உள்ள நடைமுறை சிக்கல்களைப் போக்க அரசு பரிசீலித்து வருகிறது. தொடக்கநிலை கல்விக்கும், மேல்நிலைக் கல்விக்கும் தனி இயக்குனர் நியமிக்கும் உத்தேசம் அரசுக்கு இல்லை.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் நிருபர்களிடம் தெரிவித்தார்.

## ம. பொ. சி. இன்று வானொலியில் பேசுகிறார்

சென்னை, டிச. 14— சட்டமேலவைத் தலைவர் ம.பொ.சி. இன்று (செவ்வாய்க்கிழமை) வானொலியில் பேசுகிறார். பாரதி கண்ட சமுதாயம் என்ற தலைப்பில் அவரது இலக்கிய பேருரை இரவு 9-30 மணிக்கு சென்னை, திருச்சி, கோவை, நெல்லை ஆகிய நிலையங்களில் ஒளிபரப்பப் படும்.

## மகாராஷ்டிரத்தில் 6. இ. காங்கிரஸ் எம். எல். ஏக்கள் சஸ்பெண்ட்

நாகபுரி, டிச. 14— கட்சி கூட்டத்தில் ஒழுங்கற்ற முறையில் நடந்ததாக மாநில இ. காங்கிரஸ் சட்டசபை கட்சியிலிருந்து 6 அதிருப்தி எம். எல். ஏ.க்களை மகாராஷ்டிர முதல்வர் போசலே சஸ்பெண்ட் செய்துள்ளார்.

## கருத்தடை ஆபரேஷன்: மக்கள் ஆர்வம்

வேலூர், டிச. 14— புதிய முறையில் செய்யப்படும் லேப்ராஸ்கோப் கருத்தடை அறுவை சிகிச்சை கடந்த 2 நாட்களாக வேலூரில் நடைபெற்றது.

இந்த முகாமில் கலந்து கொண்டு அறுவை சிகிச்சை செய்துகொள்ள ஏராளமான பேர் வட ஆற்காடு மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளில் இருந்தும் வேலூருக்கு வந்த வண்ணம் இருந்தனர்.

சுமார் 500க்கும் மேற்பட்டோர்களுக்கு இந்த அறுவை சிகிச்சை செய்யப்பட்டது.

தமிழ்நாட்டிற்கு

# நிலக்கரி வழங்குவதில் மத்திய அரசு முன் உரிமை தரவேண்டும்

### இந்து பத்திரிகை தலையங்கம்

சென்னை, டிச. 14. தமிழ்நாட்டில் மின்சார நெருக்கடி ஏற்பட்டுள்ளதைச் சுட்டிக்காட்டி நிலக்கரி சப்ளை செய்வதில் தமிழ்நாட்டுக்கு மத்திய அரசு முன் உரிமை தந்து வழங்க வேண்டும் என்று இந்து பத்திரிகை தலையங்கத்தில் கருத்து வெளியிட்டுள்ளது.

நிலக்கரி பற்றாக்குறை, பருவமழை பொய்த்தது ஆகியவற்றால் மின்வெட்டு அமல்படுத்தப்பட வேண்டிய நிர்ப்பந்தநிலை உள்ளது தெரிந்ததே.

தமிழகத்தில் இந்த ஆண்டு பருவமழை பொய்த்துவிட்டது. இதனால் நீர்த் தேக்கங்களில் தண்ணீர் மட்டம் குறைந்துவிட்டது.

நீர்மின் நிலைய மின்சார உற்பத்தி பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது.

இதனால் அனல்மின் நிலையங்களையே பெரிதும் நம்பவேண்டிய நிலை தமிழ்நாட்டுக்கு ஏற்பட்டுவிட்டது.

அனல்மின் நிலையங்களுக்கு மாதம் ஒன்றரை லட்சம் டன் நிலக்கரி தேவைப்படுகிறது ஆனால் மத்திய அரசு 30 ஆயிரம் டன் நிலக்கரியையே வழங்கி வருகிறது.

இப்படிப்பட்ட நிலையால் அனல்மின் நிலையங்களும் சரியாக இயங்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டு மின்வெட்டு செய்யவேண்டிய கட்டாய சூழ்நிலை ஏற்பட்டு இருக்கிறது.

இதனைக் கருத்தில் கொண்டு இந்துபத்திரிகை இன்று தலையங்கம்தீட்டியுள்ளது.

### அதிக நிலக்கரி ஒதுக்குக

மின்சார நெருக்கடியை சுட்டிக் காட்டிய இந்து பத்திரிகை தமிழ்நாட்டிற்கு அதிக அளவு நிலக்கரி ஒதுக்கும்படி மத்திய அரசைக் கோரியுள்ளது.

இந்து பத்திரிகையில் கூறப்பட்டுள்ள சில முக்கிய விவரங்கள் வருமாறு:—

1981-82-ம் நிதி ஆண்டின் இறுதியில் தமிழகத்தின் மின்சார உற்பத்தித் திறன் 2329 மெகாவாட் ஆகும். இதில் 600 மெகாவாட் திறன் கொண்ட நெய்வேலியும் உள்ளடங்கியதாகும்.

இதன் பிறகு அந்த ஆண்டு ஏப்ரலில் தூத்துக்குடி அனல்மின் நிலையத்தில் 210 மெகாவாட் திறன் சேர்ந்தது.

தமிழகத்தின் மின்சாரத் தேவையில் 40 சதவிகித அளவு நீர்மின் நிலையங்கள் மூலம் பெறப்பட்டு வருவது வழக்கம்.

கடந்த ஆண்டு வடகிழக்குப் பருவ மழையும், இந்த ஆண்டு தென்மேற்கு பருவமழையும் பொய்த்துவிட்டதால் இந்த நிலையில் பாதிப்பு ஏற்பட்டது.

இதுதவிர தமிழகம் கேரளத்தில் இருந்து ஆயிரம் மில்லியன் யூனிட் மின்சாரம்பெற்றுவந்தது.

இப்போது கேரளத்திலேயே மின்சாரப்பற்றாக்குறை ஏற்பட்டுவிட்டது.

தமிழகத்தில் அனல்மின் நிலையங்களுக்கு நிலக்கரி வருவதில் பாதிப்பு ஏற்பட்டுள்ளது. தூத்துக்குடி ஹால்டியா துறைமுகம் மூலமாக தமிழகத்திற்கு வரும் நிலக்கரி தமிழக அரசுக்கு திருப்தி தரும் அளவில் இல்லை.

ஆகவே மத்திய அரசு நிலக்கரி சப்ளை செய்வதில் தமிழகத்திற்கு முன்னுரிமை தந்து அனுப்ப வேண்டும்.

சிங்கரேணியில் இருந்தும், கிழக்கு, மத்திய பகுதிகளில் இருந்தும் நிலக்கரி அனுப்புவதில் முன்னுரிமை தர வேண்டும்.

இல்லாவிட்டால் தமிழகத்தின் மின்சார உற்பத்தி. வழங்கும் நிலை மேலும் மோசமாகிவிடும்.

இவ்வாறு இந்து பத்திரிகை தலையங்கத்தில் குறிப்பிட்டுள்ளது.

புரட்சித்தலைவர் ஆட்சியில்

# ஆதிதிராவிடர்களுக்கு ரூ. 130 கோடியில் வளர்ச்சி திட்டங்கள்

### அமைச்சர் விஜயசாரதி தகவல்

நாகர்கோவில், டிச. 14- புரட்சித்தலைவர் ஆட்சியில் ஆதிதிராவிடர் வளர்ச்சிக்கு 130 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளதாக அமைச்சர் விஜயசாரதி கூறினார்.

நாகர்கோவிலை அடுத்த தக்கலையில் நடந்த பாரதி நூற்றாண்டு விழாவில் அமைச்சர் விஜயசாரதி கலந்து கொண்டார்.

நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பேசுகையில் அமைச்சர் விஜயசாரதி கூறியதாவது:—

ஆதிதிராவிடர் நலனுக்கு புரட்சித் தலைவர் ஆட்சியில் ஏராளமான சலுகைகள் அளிக்கப்பட்டு வருகின்றன.

ஆதிதிராவிடர்களின் வளர்ச்சிக்கு கழக அரசு பல்வேறு திட்டங்களை மேற்கொண்டுள்ளது.

தமிழ்நாட்டில் 130 கோடி ரூபாயில் ஆதிதிராவிடர்கள் நலனுக்காகப் பல்வேறு திட்டங்கள் இயற்றப்பட்டு நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

### மேற்பார்வையிட ஊழியர் நியமனம்

ஆதிதிராவிடர்களுக்கு அளிக்கப்படும் கடன் உதவித் தொகைகள் விநியோகம் முறையாக நடைபெறுகிறதா என்பதை மேற்பார்வையிட ஒவ்வொரு பஞ்சாயத்து யூனியனிலும், ஒரு மேற்பாவையாளர் நியமிக்கப் பட்டு உள்ளார்.

தீண்டாமை போன்ற குற்றங்கள் நடைபெறாமலும் இவர்கள் கண்காணிப்பார்கள்.

தொழில்களைத் துவக்கவும் மற்றும் பல்வேறு வகையில் உதவிகள் அளிக்கப் பட்டு வருகின்றன.

இவ்வாறு அமைச்சர் விஜயசாரதி கூறினார்.

## காதல் எதிர்ப்பு: பெண்போலீஸ் தற்கொலை முயற்சி

சென்னை, டிச. 14— சென்னை நகர பெண் போலீஸ் காவலராக பணியாற்றி வருகிறவர் சரசு (வயது 23)

திருவல்லிக்கேணி போலீஸ் நிலையத்தில் காவலராக பணியாற்றும் சந்திரனும், சரசுவும் காதலர்கள் என்று கூறப்படுகிறது.

இருவரும் மாலை மாற்றிக் கொண்டு கணவன் மனைவியாக வாழ்ந்து வந்தார்களாம்,

இவர்களின் காதலுக்கு சரசுவின் பெற்றோர்கள் எதிர்ப்பு தெரிவித்தனர். இதனால் மனம்உடைந்த சரசு நேற்று தூக்க மாத்திரைகளை உட்கொண்டுதற்கொலை செய்துகொள்ள முயற்சி செய்தாராம்.

மயங்கிய நிலையில் சரசு ராயப்பேட்டை மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்.

## ஐதராபாத்தில் கயிறு தொழில் கருத்தரங்கு: கே. ஏ. கே. பங்கேற்பு

சென்னை, டிச. 14— கயிறு தொழில் பற்றிய கருத்தரங்கு ஒன்று வரும் 16ந் தேதி ஐதராபாத்தில் நடைபெறவிருக்கிறது. மத்திய தொழில் அமைச்சர் என். டி. திவாரி இந்தக் கருத்தரங்குக்குத் தலைமை வகிக்கிறார்.

தமிழக ஊரக தொழில் அமைச்சர் கே. ஏ. கே. இந்த கருத்தரங்கில் கலந்து கொண்டு கயிறு தொழில் சம்பந்தப்பட்ட பிரச்னைகளை எடுத்துக் கூறவிருக்கிறார்.

நாளை 15-ம் தேதி அமைச்சர் கே. ஏ. கே. விமானம் மூலம் புறப்பட்டுச் செல்கிறார். ஐதராபாத்தில் அமைச்சர் 2 நாள் சுற்றுப்பயணம் செய்து பால் பண்ணை, தோல் தொழில் சம்பந்தப்பட்ட நிறுவனங்களையும் பார்வையிடுகிறார்.

ஐதராபாத்தில் நடைபெறும் கருத்தரங்கில் ஒரிஸ்சா, ஆந்திரம், கர்நாடகம், கேரளம் ஆகிய மாநில அமைச்சர்கள் கலந்து கொள்கிறார்கள்.

# தேர்தல்வேலைகள்: ஆந்திராவுக்கு இ.காங்கிரஸ் 1000 ஜீப் சப்ளை

ஐதராபாத், டிச. 14— ஆந்திர மாநிலத்தில் தேர்தல் வேலைகளை மும்முரமாக கவனிக்க இந்திராகாங்கிரஸ் மேலிடம் சுமார் ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஜீப் வண்டிகளை ஆந்திர மாநில இந்திரா காங்கிரஸ் கட்சிக்குகொடுத்து உதவியிருக்கிறது.

ஆந்திரம், கர்நாடகம், திரிபுரா ஆகிய மாநிலங்களில் வரும் ஜனவரி 5—ம் தேதிசட்டசபை பொதுத தேர்தல் நடைபெறவிருக்கிறது.

தேர்தல் வேலைகள் ஒவ்வொரு மாநிலத்திலும் சூடு பிடித்திருக்கிறது. குறிப்பாக ஆந்திரமாநிலத்தில் எதிர்க்கட்சிகளை முறியடிக்க இந்திராகாங்கிரஸ் கங்கணம் கட்டிக் கொண்டு வேலை செய்கிறது.

இந்திரா காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் மற்ற மாநிலங்களில் இருந்து இந்த ஜீப் வண்டிகள் சாரிசாரியாக ஆந்திர மாநிலம் நோக்கி வந்த வண்ணம் உள்ளன.

இந்தக்காட்சி ஒட்டகங்கள் வரிசையாக ஊர்ந்து செல்வது போல் காட்சி அளிக்கிறது.

ஒவ்வொரு ஜீப்புக்கும் ஒரு நாளைக்கு ரூபாய் 200 வாடகை மற்றும், அதன் டிரைவர் ஒவ்வொருவருக்கும தினம் 25 ரூபாய் சம்பளம் மற்றும் படி ஊதியமாகக் கொடுக்கப்படுகிறது. ஜீப் வண்டிகளுக்கு பெட்ரோல், டீசல் மற்றும் டிரைவர்களுக்குசாப்பாடு வசதிகளை இலவசமாக ஆந்திரா காங்கிரஸ் கட்சி கொடுக்கிறது.

ஆந்திர மாநிலத்தில் போட்டியிடும் ஒவ்வொரு வேட்பாளருக்கும் 3 ஜீப்கள் வீதம் கொடுக்கபட்டு தேர்தல்வேலைகள், பிரச்சாரம்உள்பட அனைத்தும் மும்முரமாக செய்யப்பட வேண்டும் என்றும் திட்டமிடபட்டு இந்திராகாங்கிரஸ் மேலிடம உத்தரவிடபட்டுள்ளது.

வெளிமாநிலங்களிலிருந்து கொண்டு வரப்படும் ஜீப்கள் மூன்றாகவும், நான்காகவும் வரிசையாக இணைக்கப்பட்டு முதலில் செல்லும் ஜீப் மற்ற ஜீப் வண்டிகளை இழுத்துச் செல்கிறது. ஐதராபாத் மற்றும் பல நகரங்களில் கொண்டு வரப்படும் ஜீப் வண்டிகளுக்கு துவககத்திலேயே பெட்ரோல், டீசல் எண்ணெய் ஆகியவற்றை அதிகம் செலவழிக்காமல் சிக்கனப் படுத்துவதற்காக இப்படி சங்கிலி மூலம் இணைக்கப்பட்டு கொண்டுவரப்படுகின்றன

இந்திரா காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பில் உள்ள ராஜஸ்தான், பஞ்சாப், உத்தரப்பிரதேசம், மத்தியப்பிரதேசம் ஆகிய மாநிலங்களிலிருந்து இந்த ஜீப் வண்டிகள் ஆந்திர மாநிலததுக்கு அனுப்பப் பட்டு வருகின்றன.

ஜீப் வண்டிகளுக்கு மட்டும் சுமார் ஒருகோடி ரூபாய் செலவிடப்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

ஆசிய விளையாட்டில்

பதக்கங்களைப் பெற்ற

## வீரர்களுக்கு குடியரசு தினவிழாவில் பாராட்டு

புதுடெல்லி, டிச. 14— ஆசிய விளையாட்டுப் போட்டியில் பதக்கங்களைப் பெற்ற வீரர்களும், வீராங்கனைகளும் குடியரசுதின விழாவில் கவுரவிக்கப் படுகிறார்கள்.

இந்த விவரத்தை டெல்லி லெப்டினென்ட் கவர்னர் ஜக்மோகன் கூறியுள்ளார்.

குடியரசு தினவிழாவில் இவர்களுக்கு சிறப்பு அழைப்பு அனுப்பப்பட்டு வரவேற்பு அளிக்கப்படும என்றார் அவர்.

ஆசிய விளையாட்டின் போது கலந்துகொண்ட குழந்தைகளுக்கு நடந்த பாராட்டு விழாவில் ஜக்மோகன் கலந்து கொண்டார்.

# சென்ட்ரல் ரயில் நிலையத்தில் டிக்கெட் தரகர்களை கண்டுபிடிக்க எலக்ட்ரானிக்கருவி

சென்னை, டிச. 14— சென்னை சென்ட்ரல் ரெயில் நிலையத்தில் பயணச்சீட்டுகள் கொடுக்கப்படும் இடங்களில் பயணிகளிடம் பேரம்பேசி, ஏமாற்றும் தரகர்களை கண்டுபிடிக்க எலெக்ட்ரானிக் காமிராக்கள் வைக்கப்படவிருக்கின்றன.

டிக்கெட்டுகள் வாங்கிக் கொடுப்பதாகக் கூறிக் கொண்டு ரெயில்நிலையங்களில் நடமாடித் திரியும் தரகர்களை இந்தக் காமிராக்கள் படம் எடுத்து கொடுத்துவிடும்.

நிருபர்கள் கூட்டம் ஒன்றில் பேசுகையில் தெற்கு ரெயில்வே தலைமை வர்த்தக கண்காணிப்பாளர் எஸ்.கே. நாயர் இத்தகவலைத தெரிவித்தார்.

"கெல்ட்ரான்" நிறுவனம் சென்ட்ரல் ரெயில் நிலையத்தில் நான்கு அல்லது ஐந்து இடங்களில் எலெக்ட்ரானிக் காமிராக்களை விரைவில் பொருத்த இருக்கிறது. இதற்காக அந்த நிறுவனத்தினர் ஏற்கனவே கணக்கெடுப்பு ஒன்றை நடத்தியுள்ளனர் என்றும் அதைத் தொடர்ந்து ரெயில்வே அதிகாரிகளுடன் அவர்கள் பேச்சு வார்த்தை நடத்தி வருகிறார்கள் என்றும் எஸ்.கே. நாயர் கூறினார்.

முதன் முதலாக சென்ட்ரல் ரெயில் நிலையத்தில்தான் டெலிவிஷன் பொருத்தப்பட்டு அதன் மூலம் ரெயில்கள் வரும் நேரம், புறப்படும் நேரம் மற்றும் பல விவரங்கள் அவ்வப்போது பயணிகளுக்கு அறிவிக்கப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

## டாக்சி டிரைவர் கொலை: வாலிபருக்கு ஆயுள் சிறை

சென்னை, டிச. 14— டாக்சிடிரைவர் ஒருவரை பயங்கரமாகக் கத்தியால் குத்திக்கொலை செய்த வாலிபர் ஒருவருக்கு கோர்ட்டில் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது.

சென்னை திருவல்லிக்கேணியைச் சேர்ந்தவர் சுந்தரமூர்த்தி. (வயது 40) இவர் டாக்சி டிரைவராக பணியாற்றி வந்தார்.

முன் விரோதம் காரணமாக அதே பகுதியைச் சேர்ந்த சதாசிவம் (வயது 23) என்பவர் சுந்தரமூர்த்தியைக் கத்தியால்க்குத்தி கொலைசெய்தார் என்று கூறப்படுகிறது.

டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலையில் உள்ள பிரெசிடெண்ட் ஓட்டல் முன்பு கடந்த 22-7-82 அன்று இந்தக் கொலை சம்பவம் நடந்தது.

சதாசிவத்தைக் கைது செய்து மயிலாப்பூர் போலீஸ் இன்ஸ்பெக்டர் காசிபாண்டியன், சப்-இன்ஸ்பெக்டர் விஜயகுமார், விஜயராகவன் ஆகியோர் கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்தனர் வழக்கை விசாரித்த பிரின்ஸிபல் செசன்ஸ் நீதிபதி ராமலிங்கம் சதாசிவத்துக்கு ஆயுள், தண்டனை விதித்துத் தீர்ப்பளித்தார்.

(3-ம் பத்தி தொடர்ச்சி)

படவுள்ளது.

தமிழுக்கு முக்கியத்துவம் அளிக்கவேண்டுவது பாரதியின் கொள்கை. இந்தி பேசாதவர்கள் விரும்பும் வரை ஆங்கிலம் தொடர்பு மொழியாக இருக்கவேண்டும். அதற்கேற்பஅரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு பேசினார்.

### பரிசு வழங்கினார்

பாரதிவிழாவையொட்டி நடைபெற்ற போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்கு அமைச்சர் திருநாவுக்கரசு பரிசுகள் வழங்கினார்.

விழாவிற்கு திருநெல்வேலி மாவட்ட ஆட்சித் தலைவர் தலைமை வகித்தார். சட்டசபை உறுப்பினர் கருப்புசாமிபாண்டியனும் விழாவில் கலந்து கொண்டு பேசினார்.

## பாரதியின் கனவுகளை நிறைவேற்றிவரும் புரட்சித்தலைவர் அரசு

### அமைச்சர் திருநாவுக்கரசு பெருமிதம்

திருநெல்வேலி. டிச. 14. மகாகவி பாரதியாரின் கனவுகளை இன்று முதல்வர் புரட்சித் தலைவர் நிறைவேற்றி வருகிறார் என்று தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு பெருமிதத்துடன் கூறினார்

திருநெல்வேலி மற்றும் பாளையங்கோட்டை ஆகிய நகரங்களில் பாரதி நூற்றாண்டுவிழா சிறப்பாக கொண்டாடப்பட்டது.

இரண்டு நகராட்சிகளிலும் நடைபெற்ற பாரதி நூற்றாண்டு நினைவு விழாக்களில் கலந்து கொண்டு தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு சிறப்புரை ஆற்றினார்.

அவர் கூறியதாவது:—

சுதந்திர தாகம் கொண்ட இந்தியாவில் வெள்ளையர் ஆட்சி காலத்திலேயே திருநெல்வேலி சீமைக்கு சிறப்பான ஒரு தனியிடம் உள்ளது.

கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரம் பிள்ளை, சுப்பிரமணிய சிவா, வாஞ்சிநாதன், போன்ற தியாகச் செம்மல்கள் உதித்த இந்த மண்ணில் தான் மகாகவி பாரதியும் உதித்தார்.

### மக்களின் கஷ்டம்

மக்களின் கஷ்டங்களையும் நஷ்டங்களையும் சிந்தித்துப் பாடியவர் பாரதி. ஜாதி மத பேதங்களை ஒழித்துக் கட்டுவதற்கு அவர் ஏராளமானபாடல்களைப் பாடினார். தனி மனிதனுக்கு உணவில்லையெனில் ஜகத்தினை அழித்திடுவோம்' என்று வறுமையின் கொடுமையை அனுபவித்துப் பாடியவர் பாரதியார். தேசிய உணர்வு, மொழிப்பற்று, தொழில் வளர்ச்சி இத்தனையையும் அவர் சிந்தித்துப் பாடினார்.

மகாகவி பாரதியாரின் கனவுகளை இன்று முதல்வர் புரட்சித் தலைவர் நிறைவேற்றி வருகிறார். பாரதியின் சமுதாய சிந்தனை சத்துணவுத் திட்டம் தான். தனியொருவனுக்கு உணவில்லையேல் ஜகத்தினை அழித்திடுவோம் என்பதற்கிணங்க, குழந்தைகள் எல்லாம் மதிய சத்துணவு கொள்ளும்படி முதல்கட்டமாக புரட்சித் தலைவர் செய்துள்ளார்.

பாரதியாருக்கு விழா எடுத்து அவரின் கனவுகளை நனவாக்கி புரட்சித்தலைவர் அரசு செயல்பட்டு வருகிறது. தமிழுக்கு ஒரு பல்கலைக்கழகம், உலகத்தமிழ் ஆராய்ச்சிநிறுவனம்ஆகியவற்றை ஏற்படுத்தியிருக்கிறது.

பாரதி, பாரதிதாசன் ஆகியவர்களின் நினைவாக தனித்தனிபல்கலைக்கழகங்கள் நிறுவப்பட்டுள்ளன. பெண்களுக்கென தனி பல்கலைக்கழகத்தை ஏற்படுத்தியுள்ளது. ஆண்களுக்கு பெண்கள் சமமாக இருப்பார்கள் என்பதை நிரூபிக்கும் வகையில் மாவட்ட ஆட்சித் தலைவர் பதவிகள், பொறியாளர் பதவிகள், காவல்துறை கண்காணிப்பாளர் பதவிகள் ஆகியவற்றில் பெண்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். "கங்கை நதிப்புறத்து கோதுமைப் பண்டம். காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்ளுவோம்" என்று பாரதி பாடினார். இந்தப் பாட்டை தமிழ்நாட்டு மக்கள் மட்டுமல்லாமல் பிறமாநிலங்களில் உள்ள மக்களும் உணரவேண்டும்.

### புகளூரில் புதிய காகித ஆலை

"ஆயுதம் செய்வோம் நல்ல காகிதம் செய்வோம்" என்று மகாகவி பாடியதற்கிணங்க திருச்சி மாவட்டம் புகளூரில் 200 கோடி ரூபாய் செலவில் காகிதஆலை நிறுவப்

(1-ம் பத்தி பார்க்க)

### புரட்சித் தலைவர் வேண்டுகோள்..

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

வம் எனக்கு இருக்கிறது.

நான் ஒருமுறை கிராமத்திற்குச் சென்றபோது ஒரு முதியவரிடம் ஏன் முதியோர் பள்ளிக்குச் செல்லவில்லை என்று கேட்டேன்.

அவர் இனி நான் படித்து என்ன ஆகப் போகிறது என்றார்.

அதே போல சிலர் இவ்வளவு வயதான பின் படித்து என்ன ஆகப் போகிறது என்கிறார்கள்.

#### முதியவர்கள் ஒரு அகராதி

ஆனால் அவர்கள்-முதியவர்கள் ஒரு அகராதி என்பதைப புரிந்து கொள்ளவேண்டும்.

அவர்களிடம் இருந்து பலவற்றை நாம் படிக்காததைக் கூட கேட்டுத் தெரிந்துகொள்ளலாம்.

நான் நைரோபியில் ஒருசில நாட்கள் தங்கி இருந்தபோது அங்கே மகாத்மாவை மதிப்பவர்களைப் பார்த்தேன்.

கறுப்பர்களின் விடுதலைக்கு உழைத்தவர் என்பதை அவர்கள் நினைவில் வைத்திருக்கிறார்கள்.

அமெரிக்காவில் வெள்ளையர்களும், கறுப்பர்களும் இணைந்து இருப்பதை பார்த்த போது அந்த வயதானவர்களை கடவுள் என்று வணங்க வேண்டி இருக்கிறது.

அதுபோன்ற உணர்வு முதியவர்கள் பெற்று இருந்தாலும் அதை வெளியே சொல்லுவதற்கும், எழுதுவதற்குமான வாய்ப்பை உருவாக்கித் தரும் உங்களை நான் கைகூப்பி வணங்க வாழ்த்தக் கடமைப்பட்டு இருக்கிறேன்.

நான் மீண்டும் உங்களை எல்லாம் வேண்டி கேட்டுக்கொள்வது ஜனநாயக பண்பாட்டை காப்பாற்றி உலகம் முழுவதும் உள்ள முதியவர்கட்கு கல்வி தரும் திட்டத்தை தாருங்கள். அதைச் செயல்படுத்த நாங்கள் காத்திருக்கிறோம்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

## ரயிலில் நடக்கும் குற்றங்களை தடுக்க புதிய போலீஸ் பிரிவு

சென்னை, டிச. 14 ஓடும் ரயில்களில் நடைபெறும் பிக்பாக்கெட் போன்ற குற்றங்களைச் செய்பவர்களைப் பிடிக்க ஒரு புதிய போலீஸ் பிரிவு அமைக்கப்பட்டுள்ளது.

இந்தப் புதிய பிரிவு நேற்று முதல் செயல்படத்தொடங்கியுள்ளது.

தென் பிராந்திய ரெயில்வே போலீஸார், இந்தப் புதிய பிரிவை அமைத்து, ரெயில்களில் நடக்கும் குற்றங்களை குறைக்க நடவடிக்கை எடுத்துள்ளனர்.

சமூக விரோதச் செயல்கள், பிக்பாக்கெட் லைசென்ஸ் இல்லாமல் ரயிலில் வியாபாரம் செய்பவர்கள். கள்ளச் சாராயத்தை ரயில்மூலமாக கொண்டு வருவது, இவற்றைத்தடுப்பதற்காக இக்குழு செயல்படும்.

சென்னை நகர போலீசார், செங்கை மாவட்ட கிழக்கு போலீஸ் ரெயில்வே பாதுகாப்பு போலீஸ் ஆகியோர் ஒத்துழைப்புடன், ரயில்வே டிஐஜி எல்.என். வெங்கடேசன் உத்தரவின் பேரில் சென்னை ரயில்வே போலீஸ் கண்காணிப்பாளர் தினமணி தலைமையில் இக்குழு செயல்படும். சென்ட்ரல ரயில்வே இன்ஸ்பெக்டர்கள், கோபாலகிருஷ்ணன் எம். அமானுல்லா, எக்மோர் இன்ஸ்பெக்டர் மீனாட்சி சுந்தரம், சங்கரன் நம்பியார் ஆகியோரும் உடனிருந்து செயல்படுவர்.

ஆரம்பித்த முதல் நாளான நேற்றே 5 குற்றவாளிகளைக் கைது செய்து விசாரித்து வருகிறார்கள்.

இந்தபடைபீச்சிலிருந்து தாமபரம் — சென்ட்ரல்-திருவள்ளூர்— சென்ட்ரல் —கும்மிடிப்பூண்டி ஆகிய லைன்களில் செயல்படும்.

இக்குழுவில் மொத்தம் 170 பேர் செயல்படுவர். குற்றங்களும் அசம்பாவிதங்களும் அடிக்கடி ஏற்படும் பீச்—தாம்பரம் லைனில் 120 பேரும், மற்றவர்கள் சென்ட்ரலிலும் செயல்படுவார்கள் என்று கண்காணிப்பாளர் தினமணி கூறினார்.

சென்னை சென்ட்ரல் ரயில்வே நிலையத்தின் முன்பு. கார்கள், மினி பஸ்கள் நிற்பதற்கு வசதியாகவும், போக்குவரத்து இடைஞ்சல் இல்லாமல் விபத்து எதுவும் இல்லாமல் தவிர்ப்பதற்காகவும் சென்ட்ரல் ரயில்வே போலீசார் பாதையில் வெள்ளைக் கோடுகளும், மஞ்சள் கோடுகளும் போட்டுள்ளனர்.

## யுனெஸ்கோ ஆய்வு அரங்கம்: தமிழக அரசுக்கு பாராட்டு

### முதல்வருக்கு மால்கம் ஆதிசேஷய்யா நன்றி

சென்னை. டிச. 14. யுனெஸ்கோ கல்வி ஆய்வு அரங்க ஏற்பாடுகளை சிறப்பாக செய்த தமிழக அரசுக்கு யுனெஸ்கோ டைரெக்டர் பாராட்டுத் தெரிவித்தார்.

வயதுவந்தோர் கல்வி ஆய்வு அரங்கத்தில் யுனெஸ்கோ டைரக்டர் பால்மைக்கி பேசுகையில் மிகக் குறைந்தகாலத்தில் இவ்வளவுசிறப்பாக இந்த ஆய்வு அரங்கத்திற்கு ஏற்பாடு செய்த தமிழக அரசை பாராட்டுகிறேன் எனக்குறிப்பிட்டார்.

இது போன்ற ஆய்வு அரங்கங்கள் பல்வேறு நாடுகளில் நடந்து வந்திருப்பதாகவும் இனியும் தொடர்ந்து நடைபெறும் என்றும் கி.பி. 2000 ஆண்டுக்குள் கல்வி அறிவின்மையைஒழிக்கயுனெஸ்கோ பாடுபட்டு வந்திருப்பதாகவும் கூறினார.

### மால்கம் ஆதிசேஷய்யா நன்றி

இந்த ஆய்வு அரங்கிற்கு தலைவராக நியமிக்கப்பட்டுள்ள டாக்டர் மால்கம் ஆதிசேஷய்யா பேசுகையில் கூறியதாவது!—

தமிழக முதல்வர் தனது கடுமையான உழைப்பிற்கு இடையே ஒரு மணி நேரத்திற்கு இந்த ஆய்வு அரங்கிற்காக செலவிட்டு இதில் அக்கறை காட்டுவதற்காக யுனெஸ்கோ நிறுவனத்தின் சர்வதேச கல்வித்திட்டக் குழு சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

முதல்வர் இங்கே தமிழில பேசியது அவர் உண்மையான "யுனெஸ்கோவியான்" என்பதைக் காட்டுகிறது. யுனெஸ்கோ என்பது பல்வேறு மொழிகளைக் கொண்ட நாடுகள் அடங்கிய நிறுவனம்.

இந்த நிறுவனத்தில் அவரவர் மொழியில் பேசி பிறகு பொது மொழிகளில் பேசுவது மரபு. அந்த அடிப்படையில் இங்கே முதல்வர் தமது மொழியில் பேசியுள்ளார்.

அதன்படி அவர் யுனெஸ்கோ மரபைக் கடைபிடித்து பேசியதற்காக பாராட்டைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு மால்கம் ஆதிசேஷய்யா கூறினார்.

## சங்கிலி அறுப்பு: வாலிபருக்கு 1 வருடம் கடுங்காவல்

சென்னை, டிச. 14— சைக்கிள்ரிக்ஷாவில்வந்து கொண்டிருந்த வள்ளியம்மாள் (35) என்ற பெண்ணின் கழுத்தில் இருந்த தங்கச்சங்கிலியை அறுத்துக்கொண்டு ஓடிய பிரபல கேடி ரவி என்கிற ரவிகுமாருக்கு தடுப்புக் காவல் சட்டப்படி ஒரு வருடம் கடுங்காவல் சிறைத்தண்டனை அளிக்க கமிஷனர் ஸ்ரீபால் உத்தரவிட்டார்.

ரவிகுமாருக்கு ரொட்டி என்றபெயரும்உண்டாம்.

ஆனைகவுனி போலீஸ் இன்ஸ்பெக்டர் கோவிந்தராஜ் சப்இன்ஸ்பெக்டர் ரங்கநாதன் காவலர்கள் ராமசாமி மற்றும் ராமமூர்த்தி ஆகியோர் தீவிர புலன் விசாரணை செய்து இந்த 'ரொட்டி'யைப் பிடித்தனர்.

போலீசார் அவனை விசாரணை செய்ததைத் தொடர்ந்து ரூபாய் 1 லட்சம் பெறுமானமுள்ள தங்க நகைகளையும் அந்தக் கேடியிடமிருநது போலீசார் கைப்பற்றினார்கள்.

## தமிழ்நாட்டில் மாணவர்கள் சிறு சேமிப்பு ரூ 1.5 கோடி

கோவை, டிச, 14— கோவை ரங்கம்மாள் மேல்நிலைப் பள்ளியில் சிறுசேமிப்பு ஆண்டுவிழா நடைபெற்றது. இதில் தேசிய சிறுசேமிப்பு உதவி இயக்குனர் ஆர். எம். சாமிநாதன் கலநது கொண்டு பேசும்போது தமிழ்நாட்டிலுள்ள பள்ளிக் குழநதைகள் சிறுசேமிப்பு திட்டத்தில் நடபபு ஆண்டில் இதுவரையில் சுமார் 1.5 கோடி ரூபாய் செலுத்தியுள்ளார்கள்.

குழந்தைகளிடையே சேமிப்பு பழக்கம் அதிகரித்து வருகின்றது என்றும் குறிப்பிட்டார். தபால் இலாகா சீனியர் சூப்ரண்டெண்டு பால சுப்பிரமணியம்வாழ்த்திப் பேசினார்.

இந்த பள்ளியில் உள்ள 1096 மாணவ-மாணவிகளும் இச்சிறு சேமிப்புதிட்டத்தில்சேர்ந்திருப்பதாக தலைமை ஆசிரியர் திருஞான சம்பந்தம்குறிப்பிட்டார்.

அதிக சேமிப்பு செய்த மாணவி மணிமேகலைக்கும் அதற்கு அடுத்தபடியாகச் சேமித்த சாந்தகுமாரி, உமாசங்கர் ஆகியோருக்கும்' மக்கள் தொடர்பு அதிகாரி பொன்.சுப்பையா பரிசுகளை வழங்கி பேசினார். ஆசிரியர் கிருஷ்ணமூர்த்தி நன்றி கூறினார்.

பெரியார் நகர் ஒதுக்கீடுதாரர்களின்

## குறைகளை கேட்கிறார் வேலூர் நாராயணன்

சென்னை, டிச. 14— தமிழ்நாடு வீட்டு வசதி வாரியத்தலைவர் வேலூர் நாராயணன் 19-ந்தேதி அன்று காலை 10 மணியளவில் பெரியார் நகர் (கொரட்டூர்) திருமணக் கூடத்தில் அப்பகுதி ஒதுக்கீடுதாரர்களின் கோரிக்கைகளை ஏற்பார். கொரட்டூர் பகுதி ஒதுக்கீடுதாரர்கள் தாங்கள் விரும்பினால் தங்களது கோரிக்கைகளை வீட்டு வசதி வாரியத் தலைவரிடம் முறையிடலாம். வாரியத் தலைவர் அக்கோரிக்கைகளை பரிசீலனைசெய்து ஆவன நடவடிக்கைகளை மேற்கொள்வார்.

## புருஷோத்தமதாஸ் தாண்டன் தபால் தலை

டெல்லி, டிச. 14- ராஜரிஷி புருசோத்தமதாஸ் தாண்டனை கவுரவிக்கும் வகையில் தபால் தந்தி இலாகா வரும் 15ந் தேதிசிறப்பு தபால்தலை ஒன்றை வெளியிடுகிறது.

தாண்டனின் திருவுருவம் பொறிக்கப்பட்டுள்ள இத்தபால் தலையின் விலை 50 காசுகள்.

முதல் நாள் உறை மற்றும் தகவல் ஏடுகளை அனைத்து தபால்தலை அலுவலகங்கள் மற்றும் தெரிவு செய்யப்பட்ட தபால் நிலையங்களில் முறையே 50 மற்றும் 30 காசுகளுக்கு விலைக்கு கிடைக்கும்.

## லாரி மோதி 3 வயது குழந்தை மரணம்

சென்னை. டிச. 14— பள்ளி சென்றுகொண்டிருந்த 3 வயது குழந்தை லாரி மோதி இறந்தது.

அந்தச் சிறுமியின் பெயர் முனியம்மாள்.

முனியம்மாவும் அவள் அக்கா சாந்தி (வயது 10) யும் வேறு சிறுமிகளுடன் பள்ளி சென்று கொண்டிருந்தனர்.

அப்போது லாரி ஒன்று ரிவர்சில் வந்து இவர்கள் மீது மோதியது.

அதில் முனியம்மா அங்கேயே இறந்துவிட்டாள். சாந்திக்கு வலது கால் முறிந்துவிட்டது.

லாரி டிரைவர்லாரியை விட்டு விட்டு ஓடிவிட்டார். இந்த விபத்து தாம்பரம் அருகே நடந்தது.

இந்த சிறுமிகளின் தந்தை ஒரு கல்லுடைக்கும் தொழிலாளி.

## எம். ஜி. ஆர். இளைஞர் அணி வேண்டுகோள்

இளைஞர் அணி உறுப்பினர் பதிவுத் தாள்கள் பூர்த்தி செய்யப்பட்டு தலைமை நிலையத்திற்கு அனுப்பப்பட்டு வருகின்றன. பேரறிஞர் அண்ணா, மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களது உருவம் பதித்த அழகான உறுப்பினர்கள் உரிமைச் சீட்டுகள் முறைப்படி வழங்க ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

**உறுப்பினர் பதிவு செய்யும் தேதி டிசம்பர் இறுதித் தேதிவரை நீடிக்கப்பட்டுள்ளது.**

கழகத்தின் துவக்க காலம் முதல், கொடுமைகளுக்கு ஆளாக்கப்பட்டு தியாகமும், துணிவும், நிறைந்த இளைஞர்கள் கிளைகள் முதல் ஒன்றியம் வரை உள்ள பொறுப்புகளுக்கு புரட்சித் தலைவருடைய நல் ஆசியுடன் டிசம்பர் இரண்டாவது வாரத்தில் தலைமை நிலையத்தால் அறிவிக்கப்படுவர். அந்த பொறுப்பாளருக்கு தனிச் சான்றிதழ் அனுப்பிவைக்கப்படும்.

பொறுப்புகளுக்கு விண்ணப்பிக்கின்றவர்கள் தங்களது பாஸ்போர்ட் அளவு இரு புகைப்படங்களையும் இணைத்து அனுப்பி வைக்க வேண்டுகிறேன்.

**டிசம்பர் திங்கள் இரண்டாவது வாரத்தில் உறுப்பினர் உரிமைச் சீட்டுகள் அனைத்துப் பகுதிகளுக்கும் அனுப்பி வைக்கப்படும்.**

உறுப்பினர் உரிமைச் சீட்டுகள் அனுப்பப்பட்டு நிர்வாகிகளையும், அறிவித்த பின்னர் தான் ஜனவரி திங்களில் இளைஞர்அணி பணிகள் துவங்குகின்றன.

**இளைஞர் அணி பற்றிய இந்த அறிவிப்பு வெளிவரும் வரை தன்னிச்சையாக தங்களை பொறுப்புக்கு தாங்களே அறிவித்துக் கொள்வது விழாக்கள் நடத்துவது கண்டிக்கத்தக்கது இதுபோன்ற செயலில் ஈடுபடுவோர் மீது தக்க நடவடிக்கை எடுக்க நேரிடும் என்பதனை தெரிவித்துக் கொள்கிறேன்.**

புரட்சித்தலைவர் வழி நடப்போம்!
புதிய சமுதாயம் அமைப்போம்!

முசிறிபுத்தன்,
தலைவர்
எம். ஜி. ஆர்.இளைஞர் அணி

சென்னை—14
14—12—82

## கணவனைத் தேடிப் போன ஒரு இளம் பெண் பட்ட பாடு

புதுடெல்லி, டிச. 14— கணவனை தேடிப் போன ஒரு இளம் பெண் படாத பாடு பட்டாள். அவளை ஏமாற்றப் பார்த்த ஒரு கூலியை கிராம மக்கள் பிடித்து போலீசாரிடம் ஒப்படைத்தனர்.

அந்த இளம்பெண்ணின் பெயர் மீனா. ஆயாவாக வேலைபார்த்து வந்தாள்.

மீனாவுக்கு 3 ஆண்டு கடகு முன்பு திருமணம் ஆயிற்று. பஞ்சாபைச் சேர்ந்தசர்மா என்பவரை மணநதாள்.

சில மாதங்களுக்கு முன்பு சர்மாவின் தந்தைக்கு உடல்நலம் சரியில்லை என்று ஒரு கடிதம் வந்தது. வந்த கடிதத்தால்வாக்குவாதம் ஏற்பட்டது.

வாக்குவாதம் முற்ற சர்மா சண்டிகார் சென்று விட்டான.

பின்னர் மீனா செப்டம்பர் மாத முதல் வாரத்தில் டெல்லி வழியாக சண்டிகார் சென்றாள. சண்டிகாருக்கு பஸ்சில் சென்றாள்.

சென்றவள் கணவனது விலாசப் பேப்பரை எங்கேயோ தவற விட்டு விட்டாள். கண்ணீர் விட்டு அழுதாள்.

தேடி வந்த விலாசம் திசை தெரியாமல் போகவே மீண்டும் டெல்லிவழியாக பம்பாய் செல்லமுற்பட்டாள்.

டெல்லி ஸ்டேஷனில் பம்பாய் செல்ல டிக்கெட் வாங்கினாள்.

அப்போது ஒரு கூலி நைசாக அவளிடம் வந்தான். நண்பன் போல சிரித்துப் பேசினான்.

பம்பாய் ரயிலில் படுக்க இடம்தேடித் தருவதாகக் கூறினான்.

பிளாட்பாரத்தில் நடந்து செல்லும்போது தன் கதையை அப்போது அந்தக் கூலியிடம் கூறினாள.

அவள்கணவன் இருக்குமிடம் தனக்குத் தெரியும் என்று கூறினான். அவள் கணவன் இருக்குமிடத்திற்கு அழைத்துப்போவதாக ஆசைவார்த்தை கூறினான். அந்தக் கூலியின பெயர் லகான்சிங்.

பம்பாய் டிக்கெட்டை திரும்பக் கொடுக்கச் சொன்னான், மொராதாபாத்திற்கு இரண்டு டிக்கெட் வாங்கச் சொன்னான்.

வழியில் ஜமல்பூரில் ஒரு ரிக்ஷாவில் ஏறிக் கொண்டு கணவன் இருக்கும் இடம் போகலாம் என்று காடு வழியாக அழைத்துப் போனான்.

இந்த நிலையில் அங்கிருந்த கிராம மக்கள் மீனாவைப் பார்த்தனர். சந்தேகமான நிலையில் போவதைப் பார்த்தனர். அந்தக் கூலி மோசமானவன் என்பதை அறிந்தனர்.

அந்த மோசடிக்காரக் கூலியை ஒரு அறையில் தள்ளிப் பூட்டி வைத்தனர். போலீசுக்குத் தகவல் தந்து போலீசில் ஒப்படைத்தனர்.

இதன் பிறகு மீனாவையும் அவளைக் கடத்திச் செல்ல முயன்றவனையும் டெல்லிக்குக் கொண்டு வந்தனர்.

கூலி லகான்சிங் சிறைக்கு அனுப்பப்பட்டான். கடத்தல் குற்றச்சாட்டு அவன் மீது சுமத்தப்பட்டுள்ளது.

இப்போது அந்தப் பரிதாபத்துக்குரிய இளம் பெண் நாரிநிகேதனில் (பெண்கள் காப்பகம்) கையில் காசற்று உதவி செய்ய ஆளற்று நிர்க்கதியாக தவிக்கிறாள்.

அடிஷனல் செஷன்ஸ் நீதிபதியிடம்தன்னுடைய சோக வரலாற்றை மீனா தெரிவித்தாள்.

நான் பம்பாயில் வேலை பார்த்து வந்த வீட்டுக்குச் செல்ல ஆர்வமுடையவளாக இருக்கிறேன். யாரும் அதற்கு உதவ முன்வரவில்லை என்று கூறினாள்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029
Editor: E. PARASURAMAN.

மணிப்பூரில்

## பாதுகாப்பு இல்லாததால் வங்கிகள் மூடப்பட்டன

இம்பால், டிச. 14— மணிப்பூரில் பாதுகாப்பு இல்லாததால் எல்லா வங்கிகளும் நேற்று முன் தினம் மூடப்பட்டன.

ஆயுதம் தாங்கிய கொள்ளையர் தாக்குதல் இருப்பதால், பாதுகாப்பு முக்கியமாக தேவைப்படுகிறது.

இந்தப் பாதுகாப்பு வசதிகளைச் செய்ய ஒவ்வொரு வங்கியும் ரூ. 1 லட்சம் தரவேண்டும் என்று மணிப்பூர் அரசு கேட்டுள்ளது.

இவ்வளவு பெரிய தொகை தர இயலாது. ஆகவே இந்தப் பிரச்னையில் மத்திய அரசு தலையிட வேண்டும். அப்படி தலையிடவில்லை என்றால் வங்கிகளின் தலைமை அலுவலகங்களும் மூடவேண்டி இருக்கும் என்று வங்கிகள் தெரிவித்துள்ளன.





பிற்பட்டோருக்கு 50 சதவீதம் இட ஒதுக்கீடு தந்த புரட்சித்தலைவர் அரசின் அடுத்த கட்ட நடவடிக்கை

# பிற்பட்டோர் நல கமிஷன் நியமனம்

## அம்பாசங்கர் - தலைவர்

சென்னை, டிச 14: பிற்படுத்தப்பட்ட சமுதாய மக்களுக்கு மேலும் நன்மை அளிக்க பிற்பட்டோர் நல கமிஷனை அரசு நியமித்துள்ளது.

பிற்படுத்தப்பட்டோருக்கு அரசுப் பணிகளில் 50 சதவீதம் இடம் ஒதுக்க உத்தரவிட்டுள்ள புரட்சித் தலைவர் அரசு பிற்பட்டோருக்கு மேலும் சலுகைகள் அளிக்க ஆராய்ச்சி அறிக்கை தருவதற்கு பிற்பட்டோர் நலத்துறை கமிஷனை நியமித்துள்ளது.

இந்தக்குழுவின் தலைவராக ஓய்வு பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி ஜே. ஏ. அம்பாசங்கர் நியமிக்கப்பட்டுள்ளார்.

பிற்பட்டோர் நலத்துறை இயக்குனர் இக்குழுவின் செயலாளர்.

### உறுப்பினர்கள் பெயர் விவரம்

குழுவில் உறுப்பினராக நியமிக்கப்பட்டவர்கள் பெயர் வருமாறு:-

எஸ். ஆர். ராதா எம்.எல்.சி. சட்டமன்ற உறுப்பினர்கள் ஜி. விஸ்வநாதன், வி. வி. சுவாமிநாதன், எஸ். ஆண்டித்தேவர், ப. நெடுமாறன், அன்பில் தர்மலிங்கம், குமரி அனந்தன், ஜான் வின்சென்ட், டாக்டர் சமரசம் மற்றும் லியாகத்அலிகான், திருமதி சவுந்தரா கைலாசம், எம். கே. பாலசுப்பிரமணியம் (ஓய்வுபெற்ற ஐ. ஏ. எஸ். அதிகாரி)

### கமிஷனின் பணிகள்

இந்தக் கமிஷனின் பணிகள் வருமாறு:

கடந்த 1—2—80ல் அங்கீகரிக்கப்பட்டு தற்போது அமுலில் இருக்கும் பிற்பட்ட வகுப்புகளின் பட்டியலை கமிஷன் பரிசிலனை செய்யும்.

அரசியல்சட்டத்துக்கும், சுப்ரீம் கோர்ட்டின் பல்வேறு தீர்ப்புகளுக்கும் இசைவான முறையில் பட்டியல் உள்ளதா என்று ஆலோசிக்கும்.

பிற்பட்டோர்நிலைமை பற்றி ஆராய்ந்து அவர்களின் மேம்பாட்டுக்கான ஆலோசனைகளைக் கூறும்.

பிற்பட்டோர் முன்னேற்றத்திற்காக, குறிப்பாக அவர்களின் கல்வி, வேலை வாய்ப்பு ஆகியவற்றுக்காக அரசு எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் பரிசிலனை செய்யப்படும்.

### கல்வி கூடத்தில்

மிகவும் பிற்பட்டோருக்காக கொடுத்த சலுகைகளைக் கமிஷன் பரிசிலனை செய்யும்.

இவற்றை பரிசிலித்த பின் பிற்பட்டோருக்கு கல்லூரிகளிலும், உயர் கல்வி நிலையங்களிலும் அளிக்கப்பட வேண்டிய சலுகைகள், அரசு வேலைகளில் அளிக்கப்படவேண்டிய இடங்கள் மற்றும் தொழில், வியாபாரம், கடன் வசதி, உதவிப்பணம், வீட்டு வசதி ஆகியவற்றில் செய்யப்படவேண்டிய சலுகைகளை இந்தக் கமிஷன் தமிழக அரசுக்கு சிபாரிசு செய்யும்.

பிற்பட்டோர் முன்னேற்றத்துக்கு அரசு குறுகிய காலத்திலும் நீண்ட காலத்திலும் செய்யவேண்டிய காரியங்களையும் சிபாரிசு செய்யும்.

இந்தக் கமிஷன் தமிழ்நாட்டில் உள்ள எந்த மாவட்டத்திற்கும் எந்த தாலுகாவிற்கும் தேவையானால் சென்று விவரங்களை சேகரிக்கும்.

இந்த கமிஷன் தனது அறிக்கையை ஒரு ஆண்டு காலத்துக்குள் அரசிடம் கொடுக்கும்.

## கார்-லாரி மோதல்: சி.சுப்பிரமணியம் உயிர்தப்பினார்

மதுரை, டிச. 14— கார் ஒன்றும் லாரி ஒன்றும் பயங்கரமாக மோதிக் கொண்டதால் ஏற்பட்ட விபத்தில் மத்திய முன்னாள் அமைச்சர் சி. சுப்பிரமணியம் காயமின்றி உயிர் தப்பினார்.

இந்த விபத்து மதுரை மாவட்டம் வேடசந்தூர் அருகே விடுதலைப்பட்டி கிராமத்தில் நடந்தது.

ஈரோட்டில் நேற்று ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொண்டுவிட்டு சி.சுப்பிரமணியம் காரில் மதுரை திரும்பிக்கொண்டிருந்தார். விடுதலைப்பட்டி கிராமம் அருகே அந்தக் கார் வந்த போது லாரி ஒன்று அதன் மீது மோதியது.

காரை ஓட்டி வந்த டிரைவர் காயம் அடைந்தார். லாரியோ படுவேகமாக ஓடி மறைந்தது.

இந்த விபத்து பற்றி போலீசார் விசாரணை செய்து வருகிறார்கள்.

## புற்று நோய் சிகிச்சை: மருத்துவர்களுக்கு கவர்னர்வேண்டுகோள்

சென்னை, டிச 14. சிகிச்சையின் மூலம புற்றுநோயை எளிதில் ஒழித்துக்கட்டிவிடலாம் என்ற எண்ணத்தை பொதுமக்களிடையே பரப்புவதில் டாக்டர்கள் உள்பட அனைவரும் முயலவேண்டும் என்று கவர்னர் எஸ். எல். குரானா கேட்டுக்கொண்டார்.

இந்திய ஒளிக்கதிர் வீச்சு தடுப்பு நிபுணர்கள் சங்க மாநாட்டை சென்னையில் ஆளுநர் குரானா துவக்கிவைத்துப் பேசினார்.

அவர் கூறியதாவது:-

புற்று நோயை துவக்கத்திலேயே கண்டறிய வேண்டும். இந்த நோய் பற்றி பொதுமக்கள் மிகவும் பீதி அடைந்துள்ளனர்.

பொதுமக்கள்பீதி அடையத் தேவையில்லை. முறையான சிகிச்சை மூலம் புற்றுநோயை அறவே ஒழித்துவிடலாம் என்ற எண்ணம் மக்களிடையே நன்கு பரப்பப்பட வேண்டும்.

இந்த நம்பிக்கை ஏற்படுமானால் அது மக்களின் மனோநிலையை மாற்றி சிகிச்சையின் மேல் அதிக நம்பிக்கை கொள்ளவழிவகுக்கும்.

### முற்றினால் ஆபத்து

புற்று நோயை நாம் ஆரம்பத்திலேயே கண்டறிய வேண்டும். நோய் முற்றிவிட்ட பிறகு வயதான காலத்தில் அதை அறவே நீக்குவது சற்று கடினம் தான்.

மருத்துவர்கள் புற்று நோயை துவக்கத்திலேயே கண்டுபிடிக்க முயலவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு ஆளுநர் குரானா பேசினார்.

தமிழகத்தில்

## விவசாயத் தொழிலாளருக்கு ஊதிய உயர்வு

திருச்சி, டிச. 14— தமிழ்நாட்டில் உள்ள விவசாயத் தொழிலாளர்களுக்கான குறைந்த பட்ச ஊதியம் விரைவில் உயர்த்தப்படவிருக்கிறது.

திருச்சியில் நிருபர்களிடையே பேசிய தொழிலாளர் நல அமைச்சர் ராகவானந்தம் இத்தகவலைத் தெரிவித்தார்.

நிலசீர்திருத்தக்கமிஷனர் ஹரிபாஸ்கர் தலைமையிலான கமிட்டி இன்னும் ஒரு வாரத்தில் தனது அறிக்கையை அரசுக்கு சமர்ப்பிக்கும் என்றும், அறிக்கை கிடைத்ததும் அரசு ஊதிய உயர்வு பற்றி முடிவெடுக்கும் என்றும் அமைச்சர் கூறினார்.

கட்டிடத் தொழிலாளர் நலன்கள் கருதி அடுத்த சட்டசபைக் கூட்டத் தொடரில் மசோதா ஒன்று தாக்கல் செய்யப்பட இருப்பதாகவும் அமைச்சர் ராகவானந்தம் தெரிவித்தார்.

பாட்னா

பலகலைக்கழகத்தில் கலவரம்:

## 3 நாளில் 2 மாணவர்கள் கொலை

பாட்னா, டிச. 14— பாட்னா பல்கலைக் கழகக் கட்டிடத்தில் மாணவர்களிடையே கலவரம் ஏற்பட்டுள்ளது.

கடந்த 3 நாட்களில் இரு மாணவர்கள் கொலை செய்யப்பட்டுள்ளனர்.

கடந்த சனியன்று முகேஷ்குமார் என்ற 4-ம் ஆண்டு மாணவர் மீது மாணவர் கும்பல் ஒன்று குண்டு வீசியதால் மரணம் அடைந்தார்.

நேற்று கட்டிட வராந்தாவில் மற்றோர் மாணவர் கொலையுண்டு கிடந்தார்.

2-ம் ஆண்டு சட்டக்கல்லூரி மாணவரான இவரது பெயர் லல்லன் சிங். இந்தமாணவரை வராண்டாவுக்கு இழுத்து வந்து 5 குண்டுகளை அவர்மீது வீசியதாகக் கூறப்படுகிறது.

இது ஒரு இனக் கலவர அடிப்படையில் நடந்துள்ளதாகக் கூறப்படுகிறது.

இரண்டாவதாகக் கொலையுண்ட மாணவர் ஒரு வகுப்புக் கலவரத்தில் ஒரு குற்றவாளி என்றும் 18 கொலை வழக்குகளில் தேடப்பட்டு வந்தவர் என்றும் போலீசார் கூறினார்கள்.

மதுரையில்

## கழகத்தில் இணைந்த தி. மு. க. இளைஞர் அணியினர்

மதுரை, டிச. 14— மதுரையில் சிவகங்கை சேதுராசன் கலை நிகழ்ச்சி நடந்தது.

அப்போது மதுரைநகர் மாவட்டக் கழகச் செயலாளர் மதுரை எஸ். பாண்டியன் முன்னிலையில்" தி.மு.க. இளைஞர் அணி துணைச்செயலாளர் ராஜசேகரன் தலைமையில் 43தி.மு.க.வினர் கழகத்தில் சேர்ந்தனர்.

தமிழக அரசு சார்பில்

## சிட்பண்டு தொடங்க பணி தீவிரம்

### அமைச்சர் கே. ஏ. கே. தகவல்

திருச்சி, டிச. 14. தமிழக அரசு சார்பில் சிட்பண்டு தொடங்க பணிகள் தீவிரமாக நடக்கின்றன என்று அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.

தமிழ்நாடு அரசு சிட்பண்ட் தொடங்க முடிவு எடுத்திருந்தது தெரிந்ததே.

திருச்சி வந்திருந்த ஊரகத் தொழில் அமைச்சர் கே. ஏ. கே. நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் "சிட்பண்டு கார்ப்பரேஷன் அமைப்பதற்கான தொடக்கக் கட்ட வேலைகள் தீவிரமாகநடக்கின்றன" என்றார்.

இதற்காக தனி அதிகாரி நியமிக்கப்பட்டிருப்பதாகவும் அமைச்சர் கூறினார்.

தமிழ் நாட்டில் சில இடங்களில் இந்த சிட்பண்டு நிறுவனத்திற்குக் கிளைகள் அமைக்கப்படும் என்றும் அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.

குடி குடியைக் கெடுக்கும்:

## ரஷ்ய மக்களை பட்டினி போடும் "வோட்கா" மது

மாஸ்கோ, டிச. 14— குடி குடியைக் கெடுக்கும் என்பார்கள். ரஷ்யாவில் "வோட்கா" என்கிற மதுவை சர்வ சாதாரணமாக மக்கள் விரும்பிக் குடிக்கிறார்கள்.

இதனால் ரஷ்யாவில் மக்கள் மிகவும் அவதிப்படுகிறார்கள். குடும்பங்களில் வறுமை, வன்முறை சம்பவங்கள் ஆகியவற்றிற்கு இந்த 'வோட்கா' மது காரணமாக இருந்து வருகிறது என்று ரஷ்யப் பத்திரிகை "பிராவ்டா" குறிப்பிட்டுள்ளது.

மக்கள் முன்னேற்றம் அடைய வோட்கா மது விற்பனை நிறுத்தப்பட வேண்டும் என்றும் அது கூறியிருக்கிறது.